

# ஆன்மானான்மவிவேகம்



ஆசிரியர்

சி. சுப்பையசுவாமி

பதிப்பாளர்

க. வீ. சொ. வீ. அழகப்பையா

1938.

20-5

# முகவுரை.

---

வெள்ளியங்கிரியினும் உள்ளியர்மனதினும் இடையறாது இனிதுவீற்றிருந்தருளும் ஒப்பரிய சங்கரனே நம்மனோரையாட்கொள்வான் விருப்புற்று ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்யசுவாமிகளாக திருவவதாரஞ் செய்தருளிய இப்புண்ணியமா ஞாலந்தனில் தமதுயதார்த்த சொரூபத்தையறிவான் வேட்கையுற்ற நல்லறிவு படைத்த மாக்கட்கு வீடுபேற்றிற்குரிய உயர்தரச்சாதனங்கள் நான்கென பிரமசூத்திரபாஷியாதி வேதாந்த கிரந்தங்கள் கோஷிக்கின்றன. அத்தகைய சாதனசதுஷ்டய சம்பத்துக்களை வேதாந்த சாஸ்திரஜன்யக்ஞானம் உத்பததியாகாத அகத்தையுடைய ஏழைகளாகிய மந்தமுமுக்ஷுக்களும் எளிதிலுணருமாறு ஸ்ரீஜகத்குரு சங்கராசார்யகுருபரனார் தாம் செய்தருளிய வேதாந்த பிரகரணகிரந்தங்கள் பலவற்றுள்ளும் இவ்வான்மானான்மவிவேகமென்னும் நூலுமொன்றாம்.

இவ்வரிய நூல் சாதனம் நான்கனுள் முன்னதாகிய நித்தியாநித்திய வஸ்து விவேகமென்னும் சாதனத்தின் பெயரையுடையதாய் மயக்குற்ற ஜீவர்களை பீட்டித்துப்பற்றியதேஹோஹமென்னும் அனாத்தும வாசனையாகிய இருளை நீக்கி ஆத்துமவிவேகமாகிய ஞான பாஸ்கரனை அகத்திலுதயமாக்குவதாயிருப்பதால் இதனைக்கற்கின் இதற்கடுத்த இகாமுத்ரார்த்தபலபோகவிராகம், சமாதிஷட்கசம்பத்தி, முமுக்ஷுத்தன்மை என்னும் மூன்று சாதனங்களையும் முறையே மிகவெளிதிலெய்தி அதனால் அழியாப்பேரின்ப வீட்டை அனாயாசமாய் எய்துவரென்றும்; மாக்ஷிமை மிகுந்த வடமொழியிலுள்ள வான்சுதையினுமினியவிந்நூலை

நமது தமிழ்த் தாய்நாட்டில் தமிழறிவு படைத்த முமுக்ஷுக்கள்யாவரும் நந்தமிழ்த்தாய்மொழியில் எளிதிற்கற்று அதனால் உபநிஷத்பாஷியாதிபெருநூல்களின் உட்பொருள்களையறிந்து அநுஷ்டித்தற்குச் சிறந்ததோர்கருவியெனவும்; நன்குணர்ந்தவர்களும் சமஸ்கிருதபாஷையைக் கற்றுணர அவாவினர்க்குப் பண்டார்கர் சமஸ்கிருத முதற்புத்தகமியற்றியும் சிவமகிமை, வேதசாரசமுத்தரணம், தருக்கசங்கிரகதீபிகை முதலிய நூல்களின் விரிபொருட்டெளிவுரையியற்றினவர்களும் சிதம்பரம் ஸ்ரீமத்பொன்னம்பல ஞானதேசிகசுவாமிகளின் ஆதீன குருமூர்த்திகளாயெழுந்தருளியிருந்த ஸ்ரீமத்குரு சிதம்பர ஞானதேசிகசுவாமிகளின் திவ்வியசரணாரவிந்தத்துவயங்களைச்சதா ஹிருதயவாவியில் மலரச்செய்வித்து அனவரதம் அன்புபூண்டொழுகுபவர்களுமாகிய உயர்திருவாளர் சி. சுப்பைய சுவாமிகள் இவ்வான்மானுன்மவிவேகமென்னும் உயர்தர நூலை இனிமைமிக்கித்தெளிவாகிய செந்தமிழ் நடையில் இயற்றியருள,

இந்நூல் முமுக்ஷுக்களுக்கு உபயோகப்படுத்தற்குரியதென்னும் பொருளுணர்ந்தவர்களும் உயர்தரப்பொருளுடையவர்களும் ஸ்ரீமத்கோவிலூர் குருபரம்பரா ஸத்சிஷ்யாக்கிரகண்யரும் இருவிதபக்தியின் உண்மைநிலைகண்டு அநுஷ்டித்த அநுஷ்டாதாவும் புண்ணியசீலரும் வேதாந்த நல்லுணர்வுற்ற நந்தனவணிகமணிகளுட் சிறந்தவர்களுமாகிய கோட்டையூர் உயர்திரு, ஐயா க. வீ. மெ.சா. வீ. அழகப்பையா அவர்கள்சிரத்தையுடன் இந்நூலை அச்சிட்டு வெளியிட்டனர்.

பேரின்பளிப்பதிற்சிறப்புவாய்ந்த இந்நூல் ஆன்மவிருப்புடையார்க்கே அன்புடன் அளிக்கப்பெறுகின்றது.

20-5



## சாற்றுக்கவி.

---

திருவொடுயர் கலைவளர் தில்லையம் பதியினற்
றிவ்வியவருள் சிவபத்தி யார்
திண்மையக நற்றுறவி னோடும்வளர் மெய்ஞ்ஞான
வடிவதாய்த் திகழ் குருபரன்
பெருகுசீர் பொன்னம் பலம்வளர் சிதம்பரப்
பேரா ரியன்பத மலர்
பீடுபெற வேமனச் சரசதிற் றிகழ்வதாற்
பேசரிய வீடெய் தவே
குருபரச் சங்கரா சாரியா ளருள்செயாத்
மானாத்ம விவேக நூலின்
குறைவிலாப் பொருளதைத் தெளிவுறத் தமிழ்மொழியி
னன்னடை தனிற் கூறினான்
மருவுமுயர் சிர்சிகர சுப்பைய தேசிகன்
மனவருள தாற்பூ வினின்
மாக்ஷிமிகும் மோக்ஷசா தனமதனை யடியவர்
மனதிலுற வருளின னரோ

இதனையும் முகவுரையையும் இயற்றினவர்
குன்றக்குடி மேலமடாலயம்
பழ. நி. கண. நித்தியானந்த சுவாமி...

## மொழிபெயர்ப்பாளர்தற்சிறப்புப்பாயிரம்

கொற்றவா ளிறைவற் குரியநற் பதியாங்
கோவி லூர்த் திருமா பதிலே
பொற்றொளி பரவுஞ் சிதம்பரத் திலகும்
பொனம்பலக் குருபரன் மடத்திற்
பெற்றநங் குருவாஞ் சிதம்பர ஞான
தேசிதற் பேரரு ளதனு
லுற்றவா னன்ம வனன்ம விசார
முணர்த்திடு நூலிதை யுரைத்தேன்.



உ

ஸ்ரீகணேசாயநம:

# ஆன்மானன்மவிவேகம்

---

இது

ஸ்ரீ கோவிலூர் மரபு
சிதம்பரம் பொன்னம்பல ஞானதேசிகர் மடாலயம்

சீல ஸ்ரீசிதம்பர ஞானதேசிக சுவாமிகள்
மாணாக்கர்.

சி. சுப்பைய சுவாமிகளால்
இயற்றப்பெற்றது.

---

கோட்டையூர்
திருவாளர் க. வீ. சோ. வீ.
அழகப்பையா அவர்களால்

மதுரை
இராஜேஸ்வரி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றது.

---

ஈசுவரஞு பங்குனிமீ ஏப்ரல்மீ
1938.

# ஆன்மா னன்ம விவேகம்

## நூல்

காப்பு

மங்கலமா முகத்தானை மன்னியவைங் கரத்தானை
மாசற் ருனை
பொங்கருள்வீ டளிப்பானைப் புன்பிறவி தவிர்ப்பானை
போதத் தானை
யிங்குரைசெய் யிவ்வான்மா னன்மவிவே கமெனு நூ
லியற்று தற்கே
துங்கமுறவென்மனதின் விருப்பானை யனுதினமுந்
துதிசெய் வாமே

**दृश्यं सर्व मनात्मा स्याद्दृगेवात्मा विवेकि नः ।**
**आत्मा नात्म विवेकोऽयं कथितो ग्रंथ कोटि भिः ॥**

விவேகிக்குக் காணப்படுவதனைத்தும் அனான்மாவாக வும் காண்பதே ஆன்மாவாகவும் ஆகும், இந்த ஆன்மா னன்மவிவேகம் கோடி நூல்களால் சொல்லப்பட்டது.

ஆகலின் ஆன்மானன்ம விவேகஞ் சொல்லப்படுகின் றது.

ஆன்மாவுக்கெதனுற்றுன்பம் ? சரீரமெடுத்தலினல். **नेहवै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति** சரீரத்தை யுடைய ஆன்மாவிற்குப் பிரியாப் பிரியங்களின் நீக்கமில்லை என்று சுருதியுங் கூறுகின்றது. சரீரமெதனுலெடுக்கின் றது? கன்மத்தால். கன்மமெதனுலுண்டாகின்றது? இராக

முதலியவற்ருல். இராகமுதலியவை யெதனுலுண்டாகின் றன? அபிமானத்தால். அபிமான மெதனுலுண்டாகின் றது? அவிவேகத்தால். அவிவேகமெதனுலுண்டாகின் றது? அஞ்ஞானத்தால். அஞ்ஞானமெதனுலுண்டாகின் றது? எதனுனுமன்று. அஞ்ஞானம் அநாதியாய் சத்து வடிவம் அசத்து வடிவம் என்று நிச்சயிக்கக் கூடாததாய் முக்குணவடிவமாய் ஞான விரோதமாய் பாவ வடிவமாய் இருக்குமென்பர். அஃதுண்டென்பதிற் பிரமாணம் நானஞ் ஞானியென்னுமனுபவமும் देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम् தன் குணங்களால் மறைந்திருக்கின்ற தேவாத்துமசத்தியை யென்னுஞ் சுருதியுமாகுமென்க. அவ்வஞ்ஞானத்தாலவி வேகமுண்டாகின்றது. அவிவேகத்தாலபிமானமுண்டா கின்றது. அபிமானத்தால் இராகமுதலியவையுண்டாகின் றன. இராகமுதலியவற்ருற் கன்மங்களுண்டாகின்றன. கன்மங்களாற் சரீரமெடுத்தலுண்டாகின்றது. சரீரம் எடுத் தலாற்றுக்கமுண்டாகின்றது.

துக்கமெப்போது நீங்கும்? முற்றிலும் சரீரமெடா திருக்கும்போது நீங்கும். முற்றிலுமென்ற பதம் எற்றிற் கெனின் சுழுத்தியவஸ்தையிற்றுக்கம் நீங்கினுலும் எழும் பும் போது மீண்டுமுண்டாகின்றபடியால் வாசனுவடிவமாய் நிலைத்திருக்கின்றது. அதை நீக்குதற்பொருட்டு முற் றிலுமென்றபதம் வேண்டுமென்க. சரீரமெடாமை யெப் போதுண்டாம்? முற்றிலுங் கன்மங்கள் நீங்கும்போதுண் டாம். கன்மங்களெப்போது நீங்கும்? முற்றிலும் இராக முதலியவை நீங்கும்போது நீங்கும். இராக முதலியவை யெப்போது நீங்கும்? முற்றிலுமபிமானம்

நீங்கும்போது நீங்கும். எப்போதபிமானம் நீங்கும்? முற்றிலும் அவிவேகம் நீங்கும்போது நீங்கும். எப்போது அவிவேகம் நீங்கும்? முற்றிலுமஞ்ஞானம் நீங்கும்போது நீங்கும். எப்போதஞ்ஞானம் நீங்கும்? பிரம்மான்ம ஐயிக்கிய ஞானமுண்டாம் போது நீங்கும். அற்றேல் நித்தியகன்மங்கள் (வேதத்தால்) விதிக்கப்பட்டிருத்தலின் அவற்ருலவித்தை நீங்குமன்ரு ஞானத்தால் நீங்குமென்பதென்னை அற்றன்று அஞ்ஞான கன்மங்கள் தம்முள்விரோதியாகாவாகலின் கன்மங்களாலஞ்ஞானம் நீங்காது மற்ரு ஞானத்தானேயே அஞ்ஞானம் நீங்கும். அந்த ஞானமெத ஞலுண்டாம்? ஆன்மாஞன்மவிஷய விசாரத்தாலுண்டாம். அந்த விசாரத்தில் யார் யார் அதிகாரி? சாதனஞன்குடையோரதிகாரி.

நான்கு சாதனங்களாவன:— நித்தியாநித்திய வஸ்து விவேகம், இகாமுத்தரார்த்த பலபோகவிராகம், சமாதி ஷட்கசம்பத்தி, முமுக்ஷுத்தன்மை என்பன.

நித்தியாநித்தியவஸ்துவிவேகம் பிரம்மம் சத்தியம் சகத்து மித்தை யென்ற நிச்சயம்.

இகாமுத்தரார்த்த பலபோக விராகம், இக அர்த்த பலபோகவிராகம் = இவ்வுலகில் தேகத்தைக்காக்கும் அன்ஞதிகளின் வேருன மாலை சந்தனம் மாதர் முதலிய அர்த்த சம்போகங்களில் வாந்தி செய்த அன்னம் மலம் மூத்திர முதலியவற்றில் இச்சை வாராமைபோல இச்சை இல்லாமையும், அமுத்தர அர்த்தபலபோகவிராகம் = சுவர்க்க லோகமுதற் பிரம்மலோகம் வரையுள்ள பரலோகங்களிலுள்ள அரம்பை ஊர்வசி அமிர்தமுதலிய அர்த்த சம்

போகங்களில் வாந்தாசனுதியிற்போல இச்சையில்லாமையு மாம்.

சமாதி ஷட்கசம்பத்தி சமம், தமம், உபரதி, திதிக்ஷை சமாதானம், சிரத்தை என்பன. சமம் உள்ளிந்திரியமடக்குதல். உள்ளிந்திரியம் மனம். அதை அடக்குதல் சிரவண மனனநிதித்தியாசனங்களினின்றும் வேறு விஷயங்களில் செல்லாதடக்குதல். அல்லது சிரவணுதியில் நிலைபெறுத்துதல். தமம் வெளியிந்திரியங்களினடக்கம். வெளியிந்திரியம் கன்மேந்திரியமைந்தும் ஞானேந்திரியமைந்தும் அவற்றினடக்கம் சிரவணமுதலியவற்றினின்றும் வேறு விஷயங்களில் செல்லாதடக்குதல். உபரதி விதித்த கன்மங்களை விதிபூர்வகமாய் விடுதல். அல்லது சிரவணுதியிலேயே மனதை நிறுத்துதல். திதிக்ஷை தேகநாசஞ் செய்யாத சீதோஷ்ண முதலிய துவந்துவமாகிய இருமைத் தருமங்களைச் சகித்தல். அல்லது தண்டிக்குஞ்சத்தியிருந்தும் அயலாரபராதம் பொறுத்தல். சமாதானம் சிரவணுதியில் நிலைத்த மனம் வாசனுவசத்தால் விடயங்களிற் செல்லும்போதெல்லாம் அவ்விடயங்களின் ரூடதிருஷ்டியினுல் மீண்டுஞ் சிரவணுதியில் நிலைபெறுத்துதல். சிரத்தை குரு வேதாந்த வாக்கியங்களில் மிக்க வன்பு. இங்ஙனஞ் சமாதி ஷட்க சம்பத்திக் கூறப்பட்டது.

முமுக்ஷுத்தன்மை மோக்ஷத்தில் அதிக தீவிரமான இச்சையுடைமை. இவை சாதன சதுஷ்டய சம்பத்தி. இவற்றையுடையோர் சாதன சதுஷ்டய சம்பன்னர். அவருக்கே ஆன்மாஞன்ம விசாரத்தில் அதிகாரம் எங்ஙனம் பிரம்மசாரிக்குச் செய்யத்தக்கது (அத்தியயனம் குரு

சேவையினும்) வேறென்றுமின்றே அங்ஙனம் இவனுக்குச் செய்யத்தக்கது (சிரவணாதியினும்) வேறென்று மின்று.

சாதன சதுஷ்டய சம்பத்தியில்லாத இல்வாழ்வோர் வேதாந்த விசாரஞ் செய்யின் அதனாற்கெடுதியொன்று மின்று மற்றே மிக மேலானனன்மையேயுண்டாம் அது दिने दिने च वेदान्त विचाराद्भक्ति संयुतात् । गुरुशुश्रूषया लब्धात्कृच्छ्राशीति फलंलभेत् ॥ நாடோறும் பக்தியுடன் குருபணிவிடையோடு செய்யப்பட்ட வேதாந்த விசாரத்தால் நாளொன்றிற்கு எண்பது கிருச்சிர பலனுண்டாகின்றதென்று கூறப்பட்டுள்ளது.

சிரவண மனன நிதித்தியாசனம்; சிரவணம் ஆறு லிங்கங்களால் வேதாந்த வாக்கியங்களெல்லாவற்றிற்கும் அத்துவிதீய பிரம்மத்திலேயே கருத்தென்று நிச்சயஞ் செய்யும் மனதின் வியாபாரம். அத்துவிதீய பிரம்மம் சஜாதிய முதலிய பேதமற்றுச் சச்சிதானந்த சொரூபமாய் பெரிதுக்கெல்லாம் பெரிதாயிருப்பது.

ஆறு லிங்கங்கள் உபக்கிரமம் உபசம்மாரம், அப்பியாசம், பலம், அபூர்வதை, அர்த்தவாதம், உபபத்தி என்பன.

உபக்கிரமோபசம்மாரம் * பிரகரணத்திற் கூறும் பொருளை அதன் முதலிலும் முடிவிலுங் கூறுதல். அது சாந்தோக்கியத்தின் ஆருவது அத்தியாயமாகிய பிரகரணத்

* சாஸ்திரத்திலேகதேசத்துள்ளதாய் சாஸ்திர காரியத்துட்பட்ட காரியமுடையதாயிருப்பது பிரகரணமென்று நூல்களின் வேற்றுமையுணர்ந்த பெரியோர் கூறுகிற்பர்.

திஞதியில் அத்துவிதீய வஸ்துவைக்கூறுமிடத்தில் **एकमेवाद्वितीयम्** ஒன்றே இரண்டில்லை யென்றும், அந்தத்தில் **ऐतदात्म्यम्** இஃதான்மவடிவினது என்றுங் கூறப்பட்டுள்ளது.

அப்பியாசம் பிரகரணத்திற் கூறுவதை அதனிடையிலடிக்கடி கூறுவது. அது ஆண்டே அத்துவிதீய வஸ்துவைக்கூறும்போது **तत्वमसि** நீயதுவர்யிருக்கின்ருயென்று இடையில் ஒன்பது தரங் கூறப்பட்டுள்ளது.

பலம் பிரகரணத்திற் கூறும் ஆன்ம ஞானத்தின் அல்லது அதனப்பியாசத்தின் பிரயோசனமாக அப்பிரகரணத்திற்கேட்கப்படுவது. அது ஆண்டே **आचार्यवान् पुरुषोवेद** ஆசாரியனையுடைய புருடனறிகின்ருன் **तस्यतावदेवचिरं यावन्नविमोक्ष्ये अथसंपत्स्ये** எதுவரை பிராரத்தகன்மம் நீங்காதோ அதுவரை அவனுக்கிருப்பு பிறகு முத்தியையடைகின்ருன். என்று அத்துவிதீயவஸ்துஞானத்திற்கு அதன் அடைவுவடிவ பிரயோசனமாகக்கேட்கப்படுகின்றது.

அபூர்வதை பிரகரணத்திற்கூறும் அத்துவிதீய வஸ்து வேறு பிரமாணத்தாலுணரப்படாமை. அது ஆண்டே **यं वै सौम्यैतमणिमानं न निभालयसे** எ சௌமியனே எம்மிக்க நுண்ணியனை இவனையறியாயோ என்று அத்துவிதீயவஸ்து வேறு பிரமாணத்திற்கு விஷயமாகாததாகக் கூறப்பட்டிருக்கின்றது.

அர்த்தவாதம் பிரகரணத்திற்கூறுவதை ஆண்டாண்டு துதித்தல். அது ஆண்டே **उत तमादेशमप्राक्षो नेन अश्रुतं**

**श्रुतं भवति अमतं मतं अविज्ञातं विज्ञातम्** எவ்வுபதேசத்தால் கேட்கப்படாதது கேட்கப்பட்டதாகின்றதோ நினைக்கப் படாதது நினைக்கப்பட்டதாகின்றதோ அறியப்படாதது அறியப்பட்டதாகின்றதோ அவ்வுபதேசத்தைக் கேட்டாயா? என்று அத்துவிதியவஸ்துவின் துதியாகக் கூறப் பட்டுள்ளது.

உபபத்தி பிரகரணத்திற் கூறும் பொருளை யடையுஞ் சாதனத்திற் கேட்கப்படும் யுக்தி. அது ஆண்டே **सौम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातंस्याद्वाचारंभणं विकारोनामधेयं मृत्तिकेत्येवसत्यम्** ஏ அழகனே ஒருமட்பிண்டத்தையறிதலால் எல்லாம் மண்வடிவென அறியப்பட்டதாகின்றது. வாக்காலாரம்பிக்கப்படுகின்ற காரியஞ் சொன்மாத்திரம் மண்மாத்திரஞ் சத்தியம் என்பன முதலியவாக்கியங்களில் அத்துவிதிய வஸ்துவின் சாதனத்தில் காரியம் வாக்கு மாத்திரமென்பதாக (யுக்தி) கூறப்பட்டுள்ளது.

மனனம் கேட்கப்பட்ட அத்துவிதிய வஸ்துவை வேதாந்தார்த்த (சிவபிரம்மைக்கிய) உபயோகமான யுக்திகளால் இடைவிடாமற் சிந்தித்தல். அது சிவேசுவரர்களின் பேதம்மித்தை உபாதியாலாக்கப்பட்டிருத்தலின் கடாகாய மடாகாய பேதம்போல என்று பேதத்தைப் பாதிப்பதும், சிவன் பிரம்மாபேதன் சேதனத்தன்மையால் ஈசுவரசேதனம்போல என்று அபேதத்தைச் சாதிப்பது மாகிய யுக்திகளால் அத்துவிதிய பிரம்மசிந்தனமாம்.

நிதித்தியாசனம் விஜாதிய தேகாதி விருத்தியின்றி விஜாதிய அத்துவிதிய வஸ்துவின் சஜாதிய விருத்தியின்

பெருக்கம். அதாவது வேறுஜாதியான தேகமுதல் புத்தி முடிவான ஜடபதார்த்தங்களை விஷயம் பண்ணும் விருத்திகளைத் தள்ளுதலினால் அத்துவிதீய வஸ்துவை விஷயம் பண்ணும் சமானஜாதியுடைய விருத்திகளின் தொடர்பைச் செய்தல் நிதித்தியாசனமென்பதாம்.

ஆன்மானன்மவிசாரஞ் செய்யத் தக்கதென்று முன் கூறப்பட்டது. ஆண்டு ஆன்மா தூல சூக்கும காரண மென்னும் மூன்று சரீரங்களின் விலக்ஷணமும் பஞ்ச கோசங்களின் வேறுபட்டதும் மூன்றவஸ்தைகளின் சாக்ஷியும் சச்சிதானந்த சொருபமுமாம்.

அனன்மா அநித்திய ஜட துக்க சொருபமும் சமஷ்டி வியஷ்டிவடிவமும் தூலசூக்குமகாரணமுமாகிய மூன்று சரீரங்கள். [இவற்றின்றோற்றமுறையாமாறு அகண்ட பரிபூரண சச்சிதானந்தபரமான்மாவே முன்னிருந்தது இதனை **सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम्** எ அழகனே! இது முன்னஞ்சத்தாகவேயிருந்தது. ஒன்றே யிரண்டில்லை. **आत्मैवेदं सर्वम्** ஆத்மாவே இவையனைத்தும் **यत्रनान्यत्पश्यति** யாண்டு அந்நியத்தைப் பார்க்கிறானில்லை. **आत्मावाइदमेकएवाग्र आसीत्** இது முன்னம் ஆன்மா. ஒன்றாகவேயிருந்தது. **सर्वं खल्विदंब्रह्म** நிச்சயமாக இவையாவும் பிரம்மம். என்று சுருதிகளுங்கூறுகின்றன. அப்பரமான்மாவினிடத்தில் அக்கினியிற் சூடுபோல அபின்னமாயொரு சத்தியுண்டு அந்தச்சத்தி சத்துவம் இராசதம் தாமதம் என்னும் முக்குணங்களோடு கூடியது இதனை **अजामेकां-लोहितशुक्लकृष्णाम्** பிறப்பற்றதாய் ஒன்றாயிருக்கின்ற சிவப்பு

வெளுப்பு, கறுப்பு, என்னுங் குணமுடையதை என்று சுருதியுங் கூறுகின்றது. அச்சத்துவாதி குணங்களை முறையே மாயை அவித்தை பிரகிருதி எனவழங்குவர்.

அம்மாயை அநந்த சத்திகளையுடையது அதனோடுங் கூடிய பரமான்மா சர்வஞ்ஞனுகிய ஒரே ஈசுவரனென்றும் அச்சத்திகளின் வசத்தால் சிருஷ்டி முதலியவைகளைச் செய்யும் பிரம்மா முதலிய தேவதைகளென்றும் சொல்லப்படுகின்றது. இதனை **इन्द्रोमायाभिः पुरुरूप ईयते** இந்திரனுகிய பரமான்மா மாயை (மாயாசத்தி)களால் அநேக வடிவங்களாகவாகின்றது. **स ब्रह्मा स शिवः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट्** அவன் பிரம்மா. அவன் சிவன். அவன் இந்திரன். அவன் அழிவற்றவன். மேலானவன். ஸ்வராட்டு என்று சுருதிகளுங்கூறுகின்றன. இம்மாயை ஈசனுக்குக்காரண சரீரமெனப்படுகின்றது.

அவித்தை அநேக அம்சங்களையுடையது அந்த அம்சங்களோடுங் கூடிய பரமான்மா முற்றுணர் வில்லாத பல ஜீவர்களென்று சொல்லப்பட்டுத் தேவர் முதலிய எழுவகைப் பிறப்புடைத்தாகின்றது. இப்பொருளில் சுருதிகள் பலவுள. அவற்றுட் சில இங்கு வருமாறு **तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्** அது சிருஷ்டித்து அதுவே பிரவேசித்தது. **अन्तः प्रविष्टः शास्ता जनानाम्** உட்பிரவேசித்தவன் ஜனங்களின் சிக்ஷகன் **स एष इहप्रविष्टः** அவ்விவனீண்டு பிரவேசித்தவன். **एष त आत्मा** இவன் உன்னுன்மா. **स एतमेव सीमानं विदार्यैतया द्वारा प्रापद्यत** அவனிவ்வுச்சியையே பிளந்து இத்துவாரத்தாலடைந்தனன் **एष सर्वेषु भूतेषुगूढोऽऽत्मा** சர்வ

பூதங்களில் இவன் இரகசியமான ஆன்மா **एकोऽहं बहु स्यां प्रजायेय** ஒருவனாகவிருக்கும் நான் அநேகபிரஜைகளாவேன் **सएव माया परिमोहितात्मा शरीरमास्थाय करोति सर्वं स्त्र्यन्नपानादि विचित्रभोगैः सएव जाग्रत्परितृप्तिमेति** அப்பரமேசனே மாயையால் மோகிக்கப்பட்ட வடிவுடையனாய்ச் சரீரத்தைப்பற்றிச் சகலமுஞ் செய்கின்றான் மாதரன்ன பானாதி போகங்களாற் சாக்கிரத்தில் மிகுதிருத்தியடைகின்றான். என்பன முதலியன. இவ்வவித்தை சிவகாரண சரீரமென்படுகின்றது.

சிவான்மாக்கள் பிரளயத்திற்றத்தம் பாவனாஞ்ஞான கன்மங்களோடு சுழுத்தியிற்போல பரமான்மாவில் அத்தியாச ஐயிக்கியமடைகின்றனர். இக்கன்மங்கள் போகங் கொடுக்கப் பக்குவமாம் போது போக சாதன தனுகரண புவனங்களைப் படைக்க இச்சை நண்ணிய வீசன் பிரகிருதியைப்பார்க்கின்றனன் இதனை **स ईक्षाञ्चक्रे लोकान्नु सृजै** அவன் உலகங்களைப் படைப்பேனென ஈக்ஷணித்தான் என்று சுருதியுங்கூறுகின்றது. அதனாலப்பிரகிருதியினின்று மகதத்துவமும் அதனின்று அகங்காரமும் அதனின்று சத்ததன்மாத்திரையான ஆகாசமும் அதனின்று பரிசதன் மாத்திரையான வாயும் அதனின்று ரூபதன் மாத்திரையான அக்கினியும் அதனின்று ரசதன்மாத்திரையான அப்பும் அதனின்று கந்ததன்மாத்திரையான பிருதிவியும் உண்டாயின. இவற்றைத் தன் மாத்திரை பூதம் முக்குண பூதம் சூக்குமபூதம் என்றுங் கூறுவர். இவற்றின் சத்துவகுணத்திலே சமட்டியாய் உள்ளம் மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னு மந்தக்கரணமும், வியஷ்டி

யாய் சுரோத்திரம் துவக்கு சக்ஷு சிஹ்வை ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியமுமுண்டாயின. அப்பூதங்களின் இரசோகுணத்திலே வியஷ்டியாய் வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் என்னுங்கன்மேந்திரியமும் சமஷ்டியாய் வியானன் பிராணன் அபானன் சமானன் உதானன் என்னும் வாயுவும் உண்டாயின. இவ்விருபது தத்துவங்களின் கூட்டம் சூக்குமசரீரமெனப்படுகின்றது. பின்னர்த்தமோ குணத்தோடுங் கூடிய பஞ்ச பூதங்களுக்குப் பரமேசரது ஆணையால் பிரமதேவர் மூலமாய்ப்பஞ்சீகரணமுண்டாய்த் தூல பூதமுண்டாயிற்று. ஐந்து குணமுடைய பிருதிவியினின்றும் பயிர்களும் அவற்றினின்று ஐந்துகுணமுடைய நெல் கோதுமை முதலிய அன்னமுமுண்டாயின. உண்ணப்பட்ட அவற்றினின்று ஸ்திரி புருஷர்களிடத்துச் சோணிதமும் சுக்கிலமுமுண்டாய் அவர்களின் சம்பந்தத்தால் கருப்பாசயத்திற் செலுத்தப்பட்டு ஒன்பதாவது அல்லது பத்தாவது திங்களில் சருமம் உதிரம் மாமிசம் சஞயு அஸ்தி மஜ்ஜை என்னும் ஆறு தத்துவமுடைய தூல சரீரம் வெளிப்படுகின்றது இதனை आत्मनः आकाशः संभूतः आकाशाद्वायुर्वायोरग्निरग्नेरापः अद्भ्यः पृथ्वी पृथ्व्याः ओषधयः ओशधीभ्योऽन्नं अन्नात्पुरुषः ஆன்மாவினின்று மாகாயம் ஆகாயத்தினின்று வாயு வாயுவினின்றக்கினி அக்கினியினின்றப்பு அப்புவினின்று பிருதிவி பிருதிவியினின்று ஓஷதி ஓஷதியினின்று அன்னம் அன்னத்தினின்று புருடன் உண்டாயினன் என்று சுருதியுங்கூறுகின்றது. (புருடாவியக்தியுடம்பு புருடனெனப்பட்டது)

இவ்வுடம்பைச் சிவனெம்முறையெய்துவனெனின் எடுத்த இவ்வுடம்பழியுங்கால் *புரியட்டகவுடலோடு கன்மவயத்தால்பிதருலோகம்,தேவலோகம்,நரகலோகம் என்னு மூன்றிலொன்றை புல்லட்டை யென்னும் ஒருவகைப் புழுவொப்பவடைந்து ஆண்டு இன்பதுன்பம் நுகர்ந்து அப்போகமழியுங்கால் அவ்வுடலை விட்டு சந்திரமண்டலம் வந்து அதனின்று மேகமண்டலம் வந்து அதனின்று மழையோடு பூலோகம் வந்து அந்நீராலமையும் நெல்கோதுமைகளிற் சேர்ந்து அவற்றையுண்போரின் ரேதசில்வந்து இவ்வுடம்பையெய்துவனென்க.

இவ்வாறு கூறப்பட்ட தத்துவங்கள் 36. அவை பரமான்மா 1, சிவன் ஈசன் அவித்தை மாயை 4, பூதம் 5, சூக்கும சரீரதத்துவம் 20, தூலசரீர தத்துவம் 6, என்பன. இந்நூலில் உள்ளத்தையுபேக்ஷித்து சித்தத்தை மனதிலும் அகங்காரத்தைப் புத்தியிலும் அடக்கி பதினேழு தத்துவம் சூக்கும சரீரத்திற்கு என்று கூறியிருப்பது சம்பிரதாய முறையென்க. இங்ஙனந் தத்துவங்களின் தோற்றங்கூறப்பட்டது]

தூல சரீரம் பஞ்சீகரணம் பண்ணின பூதகாரியமும் கன்மத்தாலுண்டானதும் பிறப்பு முதலிய அறுவகை விகாரமுடையதுமாம். அது **पञ्चीकृत महाभूत संभवं कर्म सञ्चितम् । शरीरं सुखदुःखानां भोकायतनमुच्यते ॥** பஞ்சி

* ஞானேந்திரியம் கன்மேந்திரியம் பிராணாதி வாயு பஞ்சபூதம் அந்தக்கரணம் அவித்தை காமம் கன்மம் இவ்வெட்டும் புரியட்டகம்.

கரணம் பண்ணப்பட்ட மகாபூதத்தினின்று முண்டான தும் கன்மத்தாற் சம்பாதிக்கப்பட்டதுமான சரீரம் சுக துக்க போகங்களின் நிலைக்களமெனக் கூறப்படுகின்றது. பஞ்சிகரணம் द्विधाविधाय चैकैकं चतुर्धा प्रथमं पुनः । स्वस्वेतरद्वितीयांशैर्योजनात् पंचपंचते ॥ (பஞ்சபூதம்) ஒவ்வொன்றையுமிரண்டிரண்டாக்கி மீண்டும் முதற்பாகத்தை நன்னான்காக்கித் தன்னிரண்டாம் பாகத்தைவிட்டு மற்றவற்றினிரண்டாம் பாகத்தோடு சேர்த்தலினுல் அவை ஐந்தைந்தாம். சீர் என்னும் பகுதிக்கு இம்சையில் என்னுஞ்சத்தி ஞானத்தினுல் அந்தப்பகுதியடியாகப் பிறந்த சரீரமென்னுஞ் சொல்லுக்கு இம்சிக்கப்படுகின்றதெதுவோ அது சரீரமென்பதாம். அஃதெவ்வாறெனின் பால்யகௌமார யௌவன வயோதிக முதலிய பருவங்களினுல் இம்சிக்கப்படுகின்றதென்பதாம். தஹ என்னும் பகுதிக்கு சாம்பல் செய்தலில் என்னுஞ் சத்தி ஞானத்தினுல் அந்தப்பகுதியடியாகப் பிறந்த தேகமென்னுஞ் சொல்லுக்குச் சாம்பல் செய்யப்படுகின்றதெதுவோ அது தேகமென்பதாம். அற்றேல் சில தேகம் சாம்பற்றன்மையடைகின்றது சிலதேகம் புதைக்கப்படுகின்றது அங்ஙனமாக சவமான தேகமெல்லாம் சாம்பற்றன்மையடைகின்றன என்பதெவ்வாறெனின் அற்றன்று, எவ்வக்கினியாலேனுந் தகிக்கப்படுதல் பொருந்துகின்றதென்பதாம். அஃதெங்ஙனமெனின் எல்லோருடைய தூலதேகங்களும் ஆதியாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என்னும் முத்தாபாக்கினியாற் றகிக்கப்படுதலாற் பொருந்துகின்றதென்பதாம். ஆதியாத்மிகம் ஆத்மாவான தேகத்தைப்பற்றி நிற்பது அத்தியாத்மம். அது வாதபித்தகபங்களாலுண்டான தலைநோய் சுரம் முதலிய

வியாதி வடிவம். அதுவே ஆதியாத்மிகம். ஆதிபௌதி கம் பூதத்தைப்பற்றி நிற்பது. அது புலி திருடர் பாம்பு தேள் மூடு கொதுகு முதலியவற்ருலுண்டாந்துன்பம். ஆதி தைவிகம் தேவதையைப்பற்றி நிற்பது. அது வெய்யில் காற்று, மழை, மின்னல், இடி முதலியவற்ருலுண்டாந் துன்பம். இவை தாபத்திரயாக்கினிகளாம்.

சூக்ஷூம சரீரம் அபஞ்சிகிருத பூதகாரியமான பதி னேழு தத்துவங்களின் கூட்டம். அது இலிங்கசரீரமெனப் படும். பதினேழு தத்துவங்கள் ஞானேந்திரியமைந்து கன்மேந்திரியமைந்து பிராணுதிவாயுவைந்து மனம் புத்தி யிரண்டு என்பன.

ஞானேந்திரியம் சுரோத்திரம் துவக்கு சக்ஷு ஜிஹ்வை கிராணம் என்பன. சுரோத்திரேந்திரியம் செவியின்வேருய் செவித்தொளையில் வளைபட்ட ஆகாசத்தைப்பற்றியதாய் சத்தத்தைக்கவருஞ் சத்தியுடையதாயிருக்குமிந்திரியம். துவங்கிந்திரியம் தோலின் வேருய் தோலைப்பற்றியதாய் உள்ளங்கால் முதல் உச்சிவரை வியாபித்ததாய் சீதோஷ்ண முதலிய பரிசங்களைக் கவருஞ் சத்தியுடையதாயிருக்குமிந் திரியம். சக்ஷுவிந்திரியம் கண்ணின் வேருய் கண்ணைப் பற்றியதாய் கண்ணின் கருமணிநுனியிலிருப்பதாய் உருவ முதலியவற்றைக் கவருஞ் சத்தியுடையதாயிருக்குமிந்திரி யம். ஜிஹ்வேந்திரியம் நாவின் வேருய் நாவைப்பற்றிய தாய் நாவின் நுனியிலிருப்பதாய் இரசமுதலியவற்றைக் கவருஞ் சத்தியுடையதாயிருக்குமிந்திரியம். கிராணேந்தி ரியம் மூக்கின் வேருய் மூக்கைப்பற்றியதாய் மூக்கின்

நுனியிலிருப்பதாய் கந்த முதலியவற்றைக் கவருஞ்சத்தியுடையதாயிருக்குமிந்திரியம்.

கன்மேந்திரியம் வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் என்பன. வாக்கிந்திரியம் வாயின் வேருய் வாயைப்பற்றியதாய் எட்டிடத்தைப்பற்றிய வொலியைக்கிளப்புஞ் சத்தியுடையதாயிருக்குமிந்திரியம். எட்டிடமாவன மார்பு கழுத்து உச்சி தாலு (மென்றவுணவு மிச்சமாய்த் தங்கும் பல்லடியைச் சார்ந்த தவடையினுள்ளிடம்) நா பல்லு உதடு மூக்கு என்பன. பாணிந்திரியம் கையின் வேருய் கையிடத்தைப்பற்றியதாய் ஈதலேற்றலாதியைச் செய்யுஞ் சத்தியுடையதாயிருக்குமிந்திரியம். பாதேந்திரியம் காலின் வேருய் காலைப்பற்றியதாய் போதல் வருதலைச் செய்யுஞ் சத்தியுடையதாயிருக்குமிந்திரியம். பாயுவிந்திரியம் குதத்தின்வேருய் குதத்தைப்பற்றியதாய் மலத்தைத் தள்ளுஞ் சத்தியுடையதாயிருக்குமிந்திரியம். உபஸ்தேந்திரியம் கோசத்தின் வேருய் கோசத்தைப்பற்றியதாய் மூத்திர வீரியங்களைத் தள்ளுஞ் சத்தியுடையதாயிருக்குமிந்திரியம்.

அந்தக்கரணம் மனம் புத்தி சித்தம் அகங்காரமென்பன. மனதிற்கிடம் கழுத்தினுள்ளிடம். புத்திக்கிடம் முகம். சித்தத்திற்கிடம் நாபி. அகங்காரத்திற்கிடம் இருதயம். இவற்றின் விஷயங்கள் முறையே சமுசயம் நிச்சயம் தாரணை அபிமானமென்பன. சிந்தனுவடிவ அந்தக்கரணவிருத்தி சித்தம். அபிமானவடிவ அந்தக்கரணவிருத்தி அகங்காரம். விஷயத்தையறிவதில் வேறுபாடின்மையால் சித்தம் புத்தியிலடக்கம். சங்கற்பவடிவமாயிருத்தலில் வேறுபாடின்மையால் அகங்காரம் மனதிலடக்கம்.

புத்தி புதியதை விஷயம்பண்ணுவது. சித்தம் அநுபவித்ததை விஷயம் பண்ணுவது. மனம் உள்ளிலும் வெளியிலுமுள்ளதை விஷயம் பண்ணுவது. அகங்காரம் அஞத்துமாவோடுங் கூடிய ஆன்மாவை விஷயம் பண்ணுவது.

பிராணுதி ஐந்து வாயுக்கள் பிராணன் அபானன் சமானன உதானன் வியானன் என்பன. हृदिप्राणो गुदेऽपानः समाने नाभि संस्थितः । उदानः कंठदेशस्थो व्यानः सर्वशरीरगः ॥ இருதயத்தில் பிராணனும் குதத்தில் அபானனும் நாபியில் சமானனும் கண்டத்தில் உதானனும் சரீரமுழுவதில் வியானனும் இருக்கும். அவற்றின் விஷயங்கள் பிராணனுக்கு முன்னேக்கிச் சுவாசித்தல், அபானனுக்குக் கீழ் நோக்கிச் சுவாசித்தல், உதானனுக்கு மேனேக்கிச்சுவாசித்தல், சமானனுக்குச் சமப்படுத்துதல், வியானனுக்கு உடம்பெங்குஞ் சரித்தல் என்பனவாம். அவற்றின் உபவாயுக்களைந்து, அவை நாகன் கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்பன. அவற்றின் விஷயங்கள் नागादुग्दिरणं चापि कूर्मादुन्मीलनं तथा। धनंजयात्पोषण श्च देवदत्ताच्च जृंभणम् ॥ कृकराच्च क्षुतं जात मिति योगविदो विदुः ॥ நாகனுல் வாந்தியும் கூர்மனுல் கண் சிமிட்டலும் அவ்வாறே தனஞ்சயனுல் சரீர புஷ்டியும் தேவதத்தனுல் கொட்டாவியும் கிருகரனுல் தும்மலும் உண்டாவதே விஷயமென்று யோகமறிந்தோர் கூறுநிற்பர்.

கூறிய ஞானேந்திரிய முதலியவற்றின் அதிதேவதை दिग्वातार्क प्रचेतोऽश्वि वह्नींद्रोपेन्द्र मित्रकाः । तथा चंद्रश्चतुर्वक्त्रो रुद्रः क्षेत्रज्ञ ईश्वरः ॥ विशिष्टो विश्व स्रष्टाच विश्व योनि रयोनिजः । क्रमेण देवताः प्रोक्ताः श्रोत्रादीनां यथाक्रमात् ॥

முறையே திக்கு வாயு உபேந்திரன் மிருத்தியு பிரஜாபதி, சந்திரன் நான்முகன் க்ஷேத்திரக்ஞன் உருத்திரன், ஈசுவரன் விசிஷ்டன் விசுவசிருஷ்டா விசுவயோனி அயோனிஜன் என்பனவாம். அவற்றில் பிராணமயகோசம் கிரியாசித்தியுடையது காரியவடிவம். மனோமயகோசம் இச்சாசத்தியுடையது கரணவடிவம். விஞ்ஞான மயகோசம் ஞான சத்தியுடையது கருத்தாவடிவமாம். இவை கோசத்திரயமென்றும் இலிங்கசரீரமென்றுங் கூறப்படுவன. அவ்வாறே **पंचप्राण मनोबुद्धि दशेन्द्रिय समन्वितम् ॥ अपंची कृत भूतोत्थं सूक्ष्मांगं भोगसाधनम् ॥** பத்து இந்திரியத்தோடு கூடிய ஐந்து பிராணன் மனம் புத்தி யென்பன அபஞ்சிகிருத பூதத்தினின்று முண்டாப் சூக்ஷும சரீரமும் போக சாதனமுமாம். லீ என்னும் பகுதிக்கு மறைந்த பொருளில் என்னுஞ் சத்திஞானத்தினுலும், கம் என்னும் பகுதிக்கு அறிவித்தலில் என்னுஞ் சத்தி ஞானத்தினுலும், இவ்விரு பகுதியடியாக வுண்டான லிங்கம் என்னுஞ் சொல்லுக்கு மறைந்த பொருளை அறிவிப்பது எதுவோ அது இலிங்கம் என்பதாம். அஃதெவ்வாறு அறுவிக்கின்றதெனின் சிரவண மனனதிகளாலென்பதாம். அந்த இலிங்கமே இம்சிக்கப்படுவதால் சரீர மெனப்படுகின்றது. அஃதெவ்வாறெனின் நான் பிரம்மமாயிருக்கின்றேன் என்னும் பிரம்மான்ம ஐக்கிய ஞானத்தால் இம்சிக்கப்படுகின்றதென்பதாம். தேகம் என்பதற்குச் சாம்பலாக்கப்படுகின்றது என்னும் பொருள் பொருந்தவேண்டி லிங்கதேகமும் பிருதிவிமூலமாய் அழிகின்றதெனப்படுகின்றது (தேகசத்தத்தின் பொருள் பொருந்தவேண்டி இவ்வாறு

கூறினர் இப்பொருள் புரியப்பட்டகத்திற்பொருந்து மென்க)

காரணசரீரம் இரண்டு சரீரத்திற்குங் காரணமாயுள்ளது. அநாதியாய் அநிர்வசனீயமாய் ஆபாசத்தோடுங் கூடியதாய் பிரம்மான்ம ஐக்கிய ஞானத்தால் அழிவதாயுள்ள அஞ்ஞானமே காரணசரீரம். அது अनाद्यविद्याऽ निर्वाच्या कारणोपाधि रुच्यते। उपाधि त्रितयादन्य मात्मान मवधारयेत्॥ அநாதியாய் அநிர்வசனீயமாய் காரணோபாதியாயுள்ளது. அவித்தை யெனப்படும். உபாதி மூன்றின் வேறான ஆன்மாவை நிச்சயஞ்செய்க. இது இம்சிக்கப்படுகின்றதென்னும் பொருளில் சரீரமெனப்படுகின்றது. அஃதெவ்வாறெனின் பிரம்மான்ம ஐக்கிய ஞானத்தால் இம்சிக்கப்படுகின்றதென்பதாம். தேகமென்னுஞ் சொல்லுக்குச் சாம்பலாக்கப்படுவது என்னும் பொருள் பொருந்த வேண்டி காரணதேகத்திற்கும் பிருதிவிமூலமாய் அழிவு சொல்லப்படுகின்றது.

அநான்மா அநிர்த ஜட துக்க சொரூபமெனப்பட்டது. ஆண்டு அநிர்தம் முக்காலத்திலும் இல்லாத வஸ்து. ஜடம் தன்னையும் பிறவற்றையும் விஷயம் பண்ணும் ஞானமற்றது. துக்கம் மகிழ்வில்லாத சொரூப முடையது. முன் சமஷ்டி வியஷ்டி வடிவ மெனப்பட்டது. ஆண்டு வனமென்பது சமஷ்டியும் மரமென்பது வியஷ்டியும் அல்லது தடாகமென்பது சமஷ்டியும் நீர்த்துளியென்பது வியஷ்டியுமாம். அதுபோன்று சரீரமெல்லாஞ் சமஷ்டியும் ஒரு சரீரம் வியஷ்டியுமாம்.

அவஸ்தாத்திரயம் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யென்பன. சாக்கிரம் இந்திரியங்களாற் பொருள்களின் றோற்றம். சொப்பனம் சாக்கிர சமஸ்காரத்தாலுண்டான விஷயத்தோடுங்கூடின விருத்தி. சுழுத்தி சகல விஷயங் களின் ஞானமில்லாமை. சாக்கிரத்திற் றூலசரீர அபி மானி விசுவனென்றும் சொப்பனத்திற் சூக்குமசரீர அபி மானி தைசதனென்றும் சுழுத்தியிற் காரணசரீர அபி மானி பிராஞ்ஞனென்றுங் கூறப்படும்.

பஞ்சகோசம், அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் என்பனவாம். **पितृ भुक्तान्न-जाद्वीर्याज्जातोऽन्नेनैव वर्धते । देहः सोऽन्नमयो नात्मा प्राक्चोर्ध्वं तदभावतः ॥** தந்தைதாயுண்ட அன்னத்தாலான வீரியத்தாலுண்டான தாய் அன்னத்தால் விருத்தியடைவ தாயிருக்கும் இத்தூலதேகம் அன்னமயகோசமெனப்படும். இது முன்னும் பின்னுமில்லாமையால் ஆன்மாவன்று. **पूर्णो देहे बलं यच्छन्नक्षाणां यः प्रवर्तकः । वायुः प्राणमयो नासावात्मा चैतन्य वर्जनात् ॥** எவ்வாயு தேகத்திற்பூரித்து பலங்கொடுப்பதாய் நேத்திராதி யிந்திரியங்களை யேவுகின் றதோ அவ்வாயு பிராணமயமெனப்படும். அது அறி வற்றதாகையால் ஆன்மாவன்று. **अहंतां ममतां देहे गेहादौ च करोति यः। कामाद्यवस्थया भ्रान्तो नासावात्मा मनोमयः ॥** எது தேகத்திலும் வீடுமுதலியவற்றிலும் அகந்தையும் மமதையுஞ் செய்கின்றதோ காம முதலிய அவஸ்தை களில் கலங்குகின்றதோ அம்மனோமயம் (விகாரியாதலின்) ஆன்மாவன்று. **लीना सुप्तौ वपुर्बोधे व्याप्नुयादानखाग्रहा । चिच्छायोपेत धी नात्मा विज्ञानमय शब्दभाक् ॥** சுழுத்தியில்

அழியுஞ் சொரூபமாய் சாக்கிரத்தில் நகநுனிவரை வியா பித்ததாய் சேதனப் பிரதிவிம்பத்தோடுங் கூடியதாயிருக் கும் விஞ்ஞானமயமென்னும் புத்தி (சுழுத்தியிலொடுங்கு வதால்) ஆன்மாவன்று. काचिदंतर्मुखा वृत्तिरानन्द प्रतिबिंब भाक् । पुण्यभोगे भोगशान्तौ निद्रारूपेण लीयते ॥ புண்ணிய போகம் உதயமாகும்போது ஆனந்தப்பிரதிவிம்பத்தோடுங் கூடின யாதோ ஒருண்முகவிருத்தி யுண்டாகின்றது. போகமழியுங்கால் துயில்வடிவாய் இலயமகின்றது. அவ் விருத்தியோடுங் கூடிய அஞ்ஞானம் ஆனந்தமயம். (மேகம் போல் ஓர் போதயதாகையால்) அது ஆன்மாவன்று. देहादभ्यंतरं प्राणः प्राणादभ्यंतरं मनः । ततः कर्त्ता ततो भोक्ता गुहा सेयं परंपरा ॥ தேகத்திற்குள்ளாயிருப்பது பிராணன், பிராணனுக்குள்ளாயிருப்பது மனம், அதற்குள்ளயிருப் பது கர்த்தா (விஞ்ஞானமயன்), அதற்குள்ள்ளாயிருப்பது போக்தா (ஆனந்தமயன்) என்னும் இது குகையின் வரிசை யாகும். ஈண்டு மயமென்னும் விகுதிக்கு விகாரம் பொருள். (ஜலமயமென்றுற்போல) பெருக்கம் பொருளன்று.

தூல சரீரம் அன்னமயகோசம் மாதாபிதாக்களுண்ட அன்னத்தின் இரசம் சுக்கில சோணிதமாய்ப் பரிணமித்து அவர்களின் கூட்டத்தால் தேகவடிவ பரிணமத்தை யடை கின்றது. (இதுமுற்கூறப்பட்டது) அது கோசம்போல் மறைப்பதால் கோசமெனப்படுகின்றது. அன்னவிகார மாயிருந்துகொண்டு உறை கத்தியை மறைப்பது போலவும் உமி அரிசியை மறைப்பது போலவும் கருவை ஜராயு மறைப்பதுபோலவும் எல்லையற்ற ஆன்மாவை எல்லையுற் றது போலவும் பிறப்பாதி யறுவிகாரமற்ற ஆன்மாவை

பிறப்பாதி யறுவிகாரமுற்றதுபோலவும் முத்தாபமற்ற ஆன்மாவை முத்தாமுற்றது போலவும் மறைக்கின்றது.

கன்மேந்திரியமைந்தும் பிராணுதிவாயுவைந்துங் கூடி பிராணமயகோசமெனப்படும். அது பிராண விகாரமாயிருந்துகொண்டு பேசுதல் முதலியவின்றிய ஆன்மாவைப் பேசுவது போலவும் கொடுத்தல் முதலியவின்றிய ஆன்மாவைக் கொடுத்தல் முதலியவற்றை யுடையது போலவும் நடத்தல் முதலிய வின்றிய ஆன்மாவை நடத்தல் முதலியவற்றை யுடையது போலவும் பசிதாகமின்றிய ஆன்மாவைப்பசிதாக முடையதுபோலவும் மறைக்கின்றது.

ஞானேந்திரியமைந்தும் மனமுங்கூடி மனுேமயகோசம் எனப்படுகின்றது. அது மனதின் விகாரமாயிருந்துகொண்டு சந்தேகமுதலியவின்றிய ஆன்மாவைச் சந்தேக முதலியவற்றை யுடையது போலவும் சோக மோகாதிகளற்ற ஆன்மாவைச் சோக மோகாதிகளுற்றது போலவும் காண்டலாதியற்ற ஆன்மாவைக் காண்டலாதி யுற்றது போலவும் மறைக்கின்றது.

ஞானேந்திரியமைந்தும் புத்தியுங் கூடி விஞ்ஞானமய கோச மெனப்படுகின்றது. அது கருத்தாத்தன்மை யபிமானத்தால் இகலோக பரலோகங்களுக்குப் போக்குவரவுடைய வியாவகாரிக ஜீவனென்று சொல்லப்படுகின்றது. அது விஞ்ஞானத்தின் விகாரமா யிருந்துகொண்டு அகர்த்தாவான ஆன்மாவைக் கர்த்தாப்போலவும் ஞாதாவாகாத ஆன்மாவை ஞாதாப்போலவும் நிச்சய வியாபாரமற்ற ஆன்மாவை நிச்சய வியாபாரமுடையது போலவும்

ஜடத்தன்மையற்ற ஆன்மாவைச் சடத்தன்மையுற்றது போலவும் மறைக்கின்றது.

பிரிய மோத பிரமோத விருத்திகளையுடையதாய் அஞ்ஞானத்தை முக்கியமாய்க்கொண்ட அந்தக்கரணம் ஆனந்தமயகோசம். அது பிரிய மோத பிரமோத மற்ற ஆன்மாவைப் பிரிய மோத பிரமோதமுற்றது போலவும் அபோக்தாவான ஆன்மாவைப் போக்தாப்போலவும் பரிச்சின்ன சுகமற்ற ஆன்மாவைப் பரிச்சின்ன சுகமுற்றது போலவும் மறைக்கின்றது. விரும்பிய புத்திரர் முதலியோரைக் காணும்போதுண்டாவது பிரியவிருத்தி, விரும்பிய பொருளை அடையும்போதுண்டாவது மோதவிருத்தி, அந்த மோதமாகிய சந்தோஷம் அதிகப்படும்போதுண்டாவது பிரமோத விருத்தியெனப்படும். இக்கோசங்களில் விஞ்ஞானமயகோசம் ஞானசத்தியுடையது, அது கருத்தா வடிவம். மனோமயகோசம் இச்சாசத்தியுடையது, அது கரணவடிவம். பிராணமயகோசம் கிரியாசத்தியுடையது, அது காரியவடிவம். என்னுமிவ்வேறுபாட்டை இவற்றின் இயல்பைக்குறித்துக் கூறுநிற்பர். மூன்று கோசங்கூடிய இது சூக்குமசரீர மெனப்படுகின்றது.

ஆன்மா மூன்று சரீரங்களின் விலக்ஷணமாவது:— சத்துசித்து ஆனந்தவடிவ ஆன்மா அசத்து சட துக்கவடிவ அனான்மாவாக ஆவதில்லை யென்பதாம்.

மூன்றவஸ்தைகளின் சாக்ஷியாவது:— சாக்கிராவஸ்தையுண்டாயிற்று உண்டாகின்றது உண்டாகும், சொப்பனவஸ்தை யுண்டாயிற்று உண்டாகின்றது உண்டா

கும், சுழுத்தியவஸ்தை யுண்டாயிற்று உண்டாகின்றது உண்டாகும் என்று மூன்றவஸ்தைகளையும் ஆன்மா விகாரமின்றி யறிகின்றதென்பதாம்.

ஆன்மா பஞ்சகோசங்களின் வேறு என்பதற்குத் திருஷ்டாந்தம் யாதெனின் இப்பசு என்னுடையது, இக்குழந்தை யென்னுடையது, இக்குமரன் என்னுடையவன் இக்குமரி என்னுடையவள், இந்த ஸ்திரி என்னுடையவள் என்று இவைகளையுடைய புருடன் இவைகளினும் வேறாவதுபோல என்னுடைய அன்னமயகோசம் என்னுடைய பிராணமயகோசம் என்னுடைய மனோமயகோசம் என்னுடைய விஞ்ஞானமயகோசம் என்னுடைய ஆனந்தமய கோசம் என்று இக்கோசங்களையுடைய ஆன்மா இவற்றின் வேறாய்ச் சாக்ஷியாயிருக்கின்ற தென்பதாம். இதனை

अशब्द मस्पर्श मरूप मव्ययं तथाऽरसं नित्य मगन्धवच्चयत् ।
अनाद्यनंतं महतःपरं ध्रुवं निचाय्य तं मृत्युमुखात् प्रमुच्यते ॥

சத்தமற்றது பரிசமற்றது ரூபமற்றது குறைவற்றது அங்ஙனமே ரசமற்றது நித்தியமானது கந்தமற்றது ஆதியற்றது அந்தமற்றது மகத்தி (மாயையி)னும் பரமானது நிலையுள்ளது என யாதொரு ஆன்மாவுளதோ அதை நிச்சயித்து மரணத்தினின்றும் விடுபடுகின்றான் எனச் சுருதியுங் கூறுகின்றது.

இப்போது ஆன்மாவின் சச்சிதானந்த சொரூபம் சொல்லப்படுகின்றது:— சத்துரூபம் எதனாலும் பாதிக்கப் படாத வியல்பால் மூன்று காலத்திலும் ஒரேவடிவாயிருப்பது, சித்துரூபம் வேறு சாதனத்தை வேண்டாது தானே விளங்கிக்கொண்டு தன்னிடங் கற்பிதமான சகல பதார்த்

தங்களையும் விளக்குவது, ஆனந்தரூபம் நித்தியமாய் மிக மேலான பிரியத்திற்கிடமாய் யாவற்றினு முயர்வாயுள்ளது. இதனை **नित्य विज्ञान मानंदं ब्रह्मरातेर्दातुः परायणम्** நித்தியமாய் விஞ்ஞானமாய் ஆனந்தமாயிருக்கும் பிரம்மம் கொடுத்தலினால் தானஞ்செய்பவனுக்கு மேலான இடமாயுள்ளது (மோக்ஷ ஸ்தானமாயிருக்கின்றது) எனச் சுருதியுங் கூறுகின்றது.

[அஞன்மபதார்த்தங்களைத் தோன்றிய முறையே ஒடுக்குவதினால் நிர்விசேஷ பரமான்மா மிஞ்சுகின்றது. ஒடுக்கமுறையின் பொருட்டே தோற்றமுறையுஞ் சொல்லப்பட்டது. கேவலந் தோற்ற முறையில் மாத்திரஞ் சுருதிக்கபிப்பிராயமின்று. இதனுனேயே தோற்றமுறை பலவாக்கூறினதென்க. அற்றேல், தோற்றமுறை கூருமலே ஒடுக்கமுறை கூறப்படலாமே யெனின் அற்றன்று; எங்ஙனம் வாயுவில் நிஷேதிக்கப்பட்ட ரூபம் மற்ருேரிடத்தி லிருக்கின்றதென்று நிச்சயமாகின்றதோ அங்ஙனம் தோற்றமுறை கூருமல் பிரம்மத்தில் நிஷேதிக்கப்பட்ட உலகம் மற்ருேரிடத்திலிருக்குமென நிச்சயமாமன்றே அதனை நீக்குதற்பொருட்டுத் தோற்ற முறையுங் கூறப்பட வேண்டியதென்க. ஆகலின் ஒடுக்கமுறையாமாறு:— தேவராதி எழுவகைத்தோற்றமுடைய பௌதிகங்கள் தூல பூதங்களிலும், தூல பூதங்கள் பஞ்சிகரணம் விட்டு சூக்குமபூதத்திலும், சூக்குமபூதத்தில் சூக்குமசரீரமும் அடங்கும். சூக்குமபூதம் அகங்காரத்திலும், அகங்காரம் மகதத்துவத்திலும், மகதத்துவம் பிரகிருதியிலும், பிரகிருதி சத்தியிலும் ஒடுங்கும். இச்சத்தியுஞ் ஜீவேசர்

களும் பரமான்மாவில் ஒடுங்கப் பரமான்மாமாத்திரம் மிஞ்சும். இதுவே ஒடுக்கமுறையாம்.

இங்ஙனஞ் சமுசாரத்திற் சுழலுஞ் சீவர்கள் பிறப்பற முயலவேண்டும், இன்றேல் பெருநஷ்டமுடையோராவர். இதனை इहचेदवेदीदथ सत्यमस्ति नचेदिहावेदी न्महती विष्टिः। ஈண்டறிவானுயின் அழியாமையுண்டு அறியானுயின் பெருநஷ்டமுடையோவன் எனச் சுருதியுங்கூறுகின்றது. ஆகவின் முன்னர் ஈசுவரனை ஆராதித்தலாகிய கன்மயோகமியற்றி ஈசுவரன், குரு, வேதம், மனம் என்பவர்களின்திருவருளைப்பெற்று ஆன்மாஞன்ம விசாரஞ்செய்து அஞ்ஞானத்தைத்தள்ளி] நித்திய சுத்த புத்தமுத்தசுபாவமான பிரம்மமாக நானிருக்கின்றேனென்று சமுசயம் அசம்பாவனை விபரீதபாவனைகளின்றி எவனறிகின்ருனே அவன் ஜீவன்முத்தனுகின்ருன் [இவனே பிராரத்தம் நுகர்ந்தொழியும்போது விதேகமுத்தனுமாவன்]

இங்ஙனம் ஸ்ரீஜகத்குரு சங்கர பகவத்பாதாசாரிய சுவாமிகளியற்றிய ஆன்மாஞன்ம விசாரம் என்னும் நூலின் மொழிபெயர்ப்பு முற்றிற்று.

---

## திருவருணை ஈசான ஞானதேசிகர் துதி.

### திருவாமாத்தூர் ஸ்ரீதிருப்புகழ் சுவாமிகள் என்னும் தண்டபாணி சுவாமிகள் அருளியது.

தென்னருணை யீசான தேசிகன்மேற் செந்தமிழா
லின்னமுதம் போற்பதிக மேத்துதற்கு-தன்னருமைத்
தம்பியொடு மாவடியிற் சந்ததமும் வீற்றிருந்த
தும்பிமுகத் தையன் றுணை. (1)

செங்கதிர்போற் காவித் திருத்தா ணையுந் தவளத்
திங்கள் பொரு நீருஞ் சிறக்கவந்து காத்தருள்வாய்
பொங்கமிகு சைவப் பொதுநெறியிற் சேர்ந்து வக்கு
மெங்கள் குல பூபதியா மீசான தேசிகனே. (2)

ஈராறுபேதத் திலங்குஞ் சமய மெல்லா
மோராறு தானென் றுணர்த்தியது நீயன்றோ
காரார் பொழிற்சினையிற் காமர்வண்டு பண்பாடு
மோரார் திருவருணை யீசான தேசிகனே. (3)

மண்ணிற் பெறற்கரிய மானிடத்தில் வந்துதித்து
நண்ணித் துறந்தருளை நாடியும்வீண் போவேனோ
பண்ணிற்றிகழ்மொழியாள் பங்கனன்பர் பால்வசிப்ப
தெண்ணித் தவிக்கின்றே னீசான தேசிகனே. (4)

கோடாநுகோடி தொண்டர் கும்பிடுநின் கோயிலுக்குள்
வாடாவிளக்கு மலர்த்திருவும் வாழ்வதுபோல்
வீடாய ஞானசித்து மெய்ப்புகழுந் தோய்வேனோ
வேடார் குவளையணி யீசான தேசிகனே. (5)

பார்த்தன் களிகூரப் பாசுபத மீந்தபிரான்
கூத்தனைத்துங் காட்டிடநின் கோலமொடுவந் தருள்வாய்
நீத்தக்கடல்போ னிலவுதிருக் கூட்ட மெல்லா
மேத்தவல்ல மெய்யருள் சேரீசான தேசிகனே. (6)

---

# இந்நூலாசிரியர் இயற்றிய நூல்கள்.

| | அணா. |
|---|---|
| வேதசார சமுத்தரணமென்னும் தோடக உரை ... | 8 |
| சிவமகிமை பதவுரை விரிவுரை ... ... ... | 5 |
| கோவிலூர்க்கு சுமாஞ்சலி ... ... ... | 5 |
| தருக்க சங்கிரகம் அன்னம்பட்டீய உரை ... ... | 0 |
| ஈசான ஞான தேசிகர் சரித்திரம் ... ... ... | 4 |
| புருஷார்த்தப் பிரகரணம் ... ... ... | 2 |
| பண்டார்கர் ஸமஸ்கிருத முதற் புத்தகம் அப்பியாச மொழி பெயர்ப்புரை ... ... ... | 8 |
| சிவபுரி புராணம் ... ... ... | 0 |
| வன்னிகுல விளக்கம் ... ... ... | 1 |
| வல்லாள மகாராஜன் சரித்திர விளக்கம் ... ... | 1 |
| ஆன்மா ஞன்ம விவேகம் ... ... ... | 0 |

| | |
|---|---|
| சிக்கல், கோ. ஆ. மடாலயயம்<br>திருவருணை, ஈ. சானிய மடாலயம்<br>காளையார் கோவில், கா. சே. மடாலயம்<br>நாகப்பட்டணம் மஞ்சக்கொல்லை<br>ரா. ம. இராமசாமி முதலியார் | இவ்விடங்களில் ஷை தருக்க சங்கிரகமும், ஆன்மா ஞன்ம விவேகமும் இலவசமாய்க் கிடைக்கும். |

ஆன்மா ஞன்ம விவேகம் பதிப்பாளரிடமும் கிடைக்கும்.

ஷை ஈசானிய மடாலயத்தில் ஷை பண்டார்கர் ஸமஸ்கிருத முதற் புத்தகம் கிடைக்கும்.

இது மெட்ராஸ் டெக்ஸ்டு புக் கமிட்டியில் 9–11–37ல் அப்புரூவானது.

இதன் விலை அணு 8.